## II.—ADJOURNMENT MOTIONS.

### (1) ISSUE OF PROHIBITORY ORDER AGAINST PROCESSIONS AND DEMONSTRATIONS BY POLITICAL PARTIES DURING THE ASSEMBLY SESSION.

*Note*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the member.**

DEPUTY SPEAKER : I have received notice of an adjournment motion under Rule 42 of the Madras Legislative Assembly Rules from the hon. Member Sri M. Kalyanasundaram, which reads as follows :

"I move that the business of the House be adjourned to discuss the following matter of urgent public importance, viz., the action of the Police in the City of Madras in issuing prohibitory order against processions and demonstrations by the political parties during the period when the Assembly is in session."

The hon. Member may explain briefly how the subject-matter of the motion is a matter of urgent public importance.

**SRI M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சென்னை நகரத்தில் கூட்டம் கூடுவது, ஊர்வலம் எடுப்பது எல்லாம் கட்டுப்படுத்தப்பட்டு வருகிறது. கமிஷனர் விடும் அறிக்கையைப் பார்த்தால் ஒரு அரசியல்வாதி விடும் அறிக்கையைப் போல் இருக்கிறது. எதிர்கட்சியினர் மீது பழியைப்போட்டு, கூட்டம் கூடுவதின் சுதந்திரத்தை பறிக்கும் முறையில் இந்த தடை உத்தரவுகள் விதிக்கப்படுகிறது என்பதினால் இது முக்கிய பிரச்னையாகிறது. சாதாரண நிர்வாகக் கடமை மூலம் அவர் செய்து வரக்கூடிய கடமைகளை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ஒரு அரசியல்வாதியைப் போன்று எதிர்கட்சிகளிடையே துவேஷம், பிளவுகள் இருப்பதாக கற்பனை செய்து காட்டி எதிர்கட்சிகளைக் குறித்து அறிக்கை விடுகிறார். பொறுப்புள்ள அரசியல் கட்சிகள்தான் நம் நாட்டில் இயங்கி வருகின்றன. ஊர்வலம் எடுப்பது, பலாத்காரம் இவைகள் மூலம் கட்சிகள் இடையேயுள்ள அபிப்பிராய வித்தியாசங்களைத் தீர்க்கும் ஒரு கட்சியும் நம் நாட்டில் இல்லை. முறைப்படுத்தும் அளவிற்கு குறுக்கிடுவதில் ஆட்சேபணையில்லை. ஆனால் கூட்டம் கூடக்கூடாது, ஊர்வலம் எடுக்கக்கூடாது என்று தடை விதிக்கப்படுகிறது. அதுவும் சட்டசபை நடக்கும் காலத்தில், ஜனங்கள் இங்கு வருவது, சட்டசபை அங்கத்தினர்களிடம் அவர்கள் தங்கள் குறைகளைக் கூறுவது இவைகளுக்கு அவர்களுக்கு சுதந்திரம் இருக்கவேண்டும். அந்த சந்தர்ப்பத்திலாவது இம்மாதிரி தடை இருக்கக்கூடாது என்று இதை விவாதிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அவசரப் பிரேரணைக்கு அனுமதி கோரிய கனம் அங்கத்தினர் அவர்கள் அவசரப் பிரேரணைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்வதுபோல் பேசிவிட்டார்கள். அவர்கள், போலீஸாரைப் பற்றி என்ன சொல்ல வேண்டுமோ அதை ஒரு வாக்கியத்தில் சொல்லிவிட்டார். அவரைப் பொறுத்தமட்டில் அவரது நோக்கம் நிறைவேறி

18th September 1961] [Sri M. Bhaktavatsalam]

12 noon

விட்டது என்று எடுத்துக்கொள்ளலாம். நான் தாழ்மையோடு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன், அனுமதி கேட்கும்போது இம் மாதிரி சொல்வது சரியல்ல. இது ஒரு சாதாரண நிர்வாக விஷயம். இது "நார்மல் அட்மினிஸ்ட்ரேஷன்" பற்றியது. அவசரப் பிரேரணைக்கு இது உகந்ததல்ல என்று தெரிவித்துக்கொள்கிறேன். தாங்கள்தான் அதைப்பற்றி முடிவு செய்யவேண்டும். சட்டசபை நடக்கின்றபொழுது இந்த உத்தரவு கொண்டு வரப்பட்டது என்று சொன்னார்கள். அது சரியல்ல, சட்டசபை கூடுவதற்கு முன்னாலேயே கொண்டுவரப்பட்டது. ஆனால் அமைதிக்கு பங்கம் ஏற்படும் என்று தெரிகின்ற நேரத்தில் சட்டசபை நடந்து கொண்டிருந்தாலும், அதை சட்டசபை பார்த்துக்கொள்ளட்டும் என்று போலீசார் தங்கள் பொறுப்பை தட்டிக் கழித்துக்கொண்டு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்காமல் இருந்துவிட முடியாது. இந்த விஷயத்தில் அமைதிக்கு பங்கம் ஏற்படும் என்று போலீசாருக்கு போதுமான அளவுக்கு தகவல்கள் இருந்தன. அதன் காரணமாகத்தான் அவர்கள் போதுமான நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள். தங்களுடைய பொறுப்பை உணர்ந்து தக்க சமயத்தில் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்ததற்காக அவர்களுக்கு என் பாராட்டுதல்களை தெரிவித்துக்கொள்கிறேன். எது எப்படியிருந்தாலும் போலீசாரை தாக்கிப் பேச வேண்டும் என்ற எண்ணம் இருக்குமானால் சட்டசபையில் எவ்வளவோ சந்தர்ப்பம் இருக்கிறது. ஆகவே இதை அவசரப் பிரேரணையாக ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் போலீசாருக்கு தகவல்கள் வந்திருக்கின்றன என்று தெரிவித்தார்கள். அப்படியானால் அந்தத் தகவல்களை இந்த சபையின் முன்னால் வைக்க முடியுமா ?

DEPUTY SPEAKER : Though the subject refers to a definite matter, it does not involve more than ordinary administration of law, as the prohibitory order has been passed in the course of normal maintenance of law and order. Therefore, I rule the motion out of order.

### (2) FAILURE OF THE GOVERNMENT TO PERMIT THE EXPORT OF JAGGERY.

DEPUTY SPEAKER : I have received notice of an adjournment motion from hon. Member Sri V. K. Kothandaraman under Rule 42 of the Madras Legislative Assembly Rules which reads as follows :

"I move that the business of the House be adjourned to discuss the following matter of urgent public importance, viz., the failure of the Government to accord permission for the export of jaggery from the State and the consequent hardship caused to sugarcane growers and jaggery merchants in the State."